# அருள்

மாத இதழ்

விலை 30 காசு

ஆசிரியர்:
திருமதி
தமிழ்வாணன்





தென்னாட்டில் சிறந்த
தெய்விகப் பத்திரிகை




தமிழ் மாத முதல் நாள் வெளிவருகிறது

## இந்த இதழில்



அருள்-2 மே
கருணை-8 15-5-68
வைகாசி, கீலக விலை: 30 காசு



# கெட்ட பழக்கங்களை மாற்ற வேண்டும்

நம்மை அறியாமலே நம்மிடம் சில கெட்ட பழக்கங்கள் வந்து விடுகின்றன. இவைகளை எளிதில் போக்க முடிவதில்லை. அப்படியே விட்டு விட்டால் இந்தக் கெட்ட பழக்கங்கள் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே வரும். கெட்ட பழக்கங்களை நாம் ஒழிக்க வேண்டுமானால், அதற்குப் பதில் ஏதாவது நல்ல பழக்கங்களைக் கைக் கொள்ள வேண்டும். அப்போதுதான் அவை சுலபத்தில் மாறும்.

சினிமாவுக்கு அடிக்கடி போவதும் ஒரு கெட்ட பழக்கமே. இந்தக் கெட்ட பழககத்தைப் போக்க, சினிமாவுக்குப்போவதை நிறுத்தினால் மட்டும் முழுவெற்றி தராது. மனம் சினிமாவைப் பற்றியே எண்ணிக்கொண்டிருக்கும். ஆகையால், சினிமாவுக்குப் போக வேண்டும் என்று தோன்றும்போதெல்லாம் உங்களுக்குப் பிடித்த ஒரு கோயிலுக்குப்போகலாம். இதனால் கௌரவம் கிடைக்கும். அமைதி வரும். பக்தி வளரும்.

கடன் வாங்குவது ஒரு கெட்ட பழக்கம். கடன் வாங்குவதை விட்டு விட்டால் மட்டும் போதாது. எதிர்காலத்தில் வர இருக்கும் செலவுகளை முன்பே எதிர்பார்த்து, அவைகளைச் சமாளிக்க முன் ஏற்பாடுடன் பணம் சேர்க்கவும் வேண்டும். அப்போதுதான் கடன் வாங்கும் பழக்கம் மறந்து, பணம் சேர்ப்பதால் மனத்தில் மிக மகிழ்ச்சி ஏற்படும்.

புகை பிடிப்பவர்களும், மது அருந்துபவர்களும், இரண்டையும் விட்டு விட்டு, மனத்தை வேறு பக்கம் திருப்ப, தினமும் கொஞ்ச நேரம் தியானம் செய்ய வேண்டும். ஆண்டவனின் சிலைக்கு முன்போ, படத்துக்கு முன்போ உட்கார்ந்து, தியானம் செய்யப் பழகிக்கொள்ளலாம். தனிமையில் திறந்த வெளியிலோ மலையின் மீதோ, ஓர் அறையிலோ உட்கார்ந்தும் ஆண்டவனை நினைத்துத்தியானம் செய்யலாம்.

எதற்கெடுத்தாலும் மற்றவர்களிடம் வீணாக வாதாடுபவர்கள் வாதாடுவதை விட்டுவிட, பேச்சு வரும் என்று தெரிந்தால் பேசாமல் போய்விட வேண்டும்! இல்லாவிட்டால் மீண்டும் வாதாடவே தோன்றும்!

○

# நம்மாழ்வார்

டாக்டர் டி. எம். பி. மகாதேவன்

தென்னாட்டுச் சைவத்திற்கு நாயன்மார்கள் எப்படியோ, அப்படியே தென்னாட்டு வைண வத்திற்கு ஆழ்வார்கள் உளர். 'ஆழ்வார்' என்ற சொல் 'இறை வன் அருள்வெள்ளத்தில் ஆழ்ந்து கிடப்பவர், இறைவன் அன்பி பிலும் இன்பத்திலும் மூழ்கி யிருப்பவர்' என்ற பொருளுடை யதாம். வைணவக் கொள்கைப் படி திருமாலின் தொண்டர் களான ஆதிசேடன், கருடன் முதலியோரும் அவருடைய ஆயு தங்களான சங்கு சக்கரம் போன்றவையும் பன்னிரு ஆழ் வார்களாக அவதாரம் செய் தார்கள். ஸ்ரீமன் நாராயண னிடத்தில் அன்பு கொண்ட மெய்யடியார்கள் பெரும்பாலும் திராவிட நாட்டின் தூய ஆறு களான தாமிரபரணி, வைகை, பாபநாசினி, காவேரி, இவைகளை யடுத்த இடங்களிலே பிறப்பார் கள் என்று ஸ்ரீமத் பாகவதத்தில் (V 38-40) முன் அறிவிப்பு உளது. ஸ்ரீ முஷ்ண மஹாத் மியத்தில் இவ்வடியார்கள் பிரா மணன், க்ஷத்திரியர் போன்ற எல்லா வகுப்புக்களிலும் பிறந்து திராவிட மொழிப் பாசுரங்கள் பாடி உயர்வற உயர்ந்த உண்மையை யெடுத்தோதுவார் கள் என்று கூறப்பட்டுள்ளது.

ஆழ்வார்கள் பாடிய பாசுரங் களினதொகுப்புத் திவ்யப் பிரபந் தம் எனப் பெயர் பெறும். ஏறத்தாழ ஆயிரம் பாசுரங்கள் கொண்ட நான்கு பகுதிகளாக இவை வகுக்கப் பெறுவதால் நாலாயிரப் பிரபந்தம் எனப் பெறும். நாலாயிரப் பிரபந்தம் மூன்று இரகசியங்கள் என்ப வற்றை யெடுத்துரைப்பதாகச் சொல்வதுண்டு. திருமந்திர மாகிய இரகசியம் முதலிரண்டு ஆயிரங்களில கூறப்படுகிறது. சரம சுலோகம் மூன்றும் ஆயிரத் திலும் நான்காம் ஆயிரத்திலும் பேசப் பெறுகின்றன. திருமந் திரம் மூன்றுசொற்களாலானது; ஓம்நம என்ற இரு சொற்கள் முதலாயிரத்திலும் நாராயண என்றசொல இரண்டாமாயிரத் திலும் விளக்கப் பெறுகின்றன. சரம சோகம் என்பது ஸ்ரீ கிருஷ் ணன் பகவத் கீதையின் முடிவில் கூறுவது, உயிர் தன்னை அறவே இறைவனிடம் ஒப்புவிக்க வேண் டும் என்று வற்புறுத்துவது வீடு பேற்றுக்கு வழி, வீடுபேறடை வதற்குத் திருமகள் உயிர்களுக் களுக்காகத் திருமாலிடம் பரிந்து பேசுவது என்பன பற்றி இரு வரி களில் த்வயமந்திரம் கூறுகிறது.

ஆழ்வார்களில் தலைசிறந்தவர் நம்மாழ்வாராவர். மூனறுயிர மாகிய திருவாய்மொழியும் நான் காம் ஆயிரத்தில சில பகுதிகளும் அவரியற்றியன. வேதாந்த தேசிகர் திருவாய்மொழியைத் திராவிட உபநிடதம் என்கிறார். இராமநுஜரும் அவருக்குப் பின் வந்த ஆசாரியர்களும திருவாய் மொழிககு ஆறுயிரப்படி, பன்னி ராயிரப்படி, இருபத்து நாலா யிரப்படி அல்லது ஈடு என்ற விளக்க உரைகள் வெளி வருவ தற்குக் காரணமாயிருந்தனர். ஆசாரஹ்ருதயம் என்பது இவை களுக்குப்பின ஏற்பட்ட உரை களுள் ஒன்று. வேதாந்த தேசி கர் விரிவான பேருரை ஒன்று எழுதியாகத் தெரிகிறது.

நம்மாழ்வார் உட்பட எல்லா

ஆழ்வார்களுடைய வரலாற்றையும் பற்றித் தெரிந்து கொள்ள உதவும் மூல நூல்கள் திவ்ய சூரி சரித்திரம், பிரபன்னுமிர்தம், குருபரம்பரை, பிரபாவம், பிரபந்தசாரம் உபதேச ரத்னமாலை, பழநடை விளக்கம் போன்றவையாம். பிற மெய்யடியார்கள் வரலாற்றைப் போல நம்மாழ்வார் வரலாற்றிலும் எது உண்மையாக நடந்தது, எது கதையாக வளர்ந்தது என்று பிரித்தறிவது எளிதன்று.

நம்மாழ்வாரை உயிராகவும், பொய்கை, பூதம், பேய் ஆழ்வார்களை உள்ளமாகவும், பிற ஆழ்வார்களை உடலாகவும் கூறுவது வைணவ மரபு. கலியுகத்தின் தொடக்கத்தில் சேனை முதலியார் அல்லது விஷ்வச்சேனர் நம்மாழ்வாராகப் பிறந்து திருமாலிடம் அன்பு செலுத்தும் நெறியைப் புதுப்பித்து வலியுறுத்துவார் என்று பவிஷ்ய புராணத்தில் முன் அறிவிப்பு உளது. பிரமாண்ட புராணம் நம்மாழ்வார் பிறப்பிடத்தை; பாண்டிய நாட்டில் தாமிரபரணிக் கரையில் உள்ள ஸ்ரீ நகர் (திருநகரி) என்று குறிப்படுகிறது.

இப்போது நம்மாழ்வார் பெயரால் ஆழ்வார் திருநகரி என்று வழங்கும் திரு நகரியில் (இதற்குத் திருகுருகூர் என்றும் பெயருண்டு) காரியார் என்றொரு சிற்றரசனிருந்தார். அவர் திருவண்பரிசாரத்தைச் சேர்ந்த உடைய நங்கையார் என்பவரை மணஞ்செய்து கொண்டார். திருவண்பரிசாரத்திலிருந்து திருக்குருகூர் வரும் வழியில் ஒரு நாள் மேற்குத் தொடர்ச்சி மலையைச் சேர்ந்த மஹேந்திரமலைக் கருகில் உள்ள திருக்குறுங்குடியில் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள நம்பியென்ற திருநாமமுடைய பெருமானை வணங்கிமகப்பேறுகோரினுர்கள். பெருமாள் அர்ச்சகர் வாயிலாக அவர்களை வாழ்த்தித் தாமே அவர்களுக்கு மகனாக வந்து பிறப்பதாகக் கூறினர். உடைய நங்கையார் கருத்தரித்து உரிய காலத்தில் நன்மகனை யீன்றெடுத்தார்கள். இம்மகவே நம்மாழ்வார் (நம்முடைய ஆழ்வார்) என்று பிற்காலத்தில் உலகத்திற்கு அறிமுகமானது. இக்கலியுகத்தின் நாற்பத்தி மூன்றும் நாள் (கி. மு. 3102) இவர் பிறந்தார் என்பது வைணவ மரபு. இதனையேற்காத சில அறிஞர்கள் நம்மாழ்வார் பிறப்பு கி. பி. ஏழாம் நூற்றுண்டிற்கும் ஒன்பதாம் நூற்றுண்டிற்கும் இடையிலிருந்திருக்க வேண்டும் என்று கருதுகிறுர்கள்.

திருமாலின் கௌஸ்துபமும் சேனை முதலியோரும் சேர்ந்து பராங்குசர் என்ற நம்மாழ்வாராக அவதாரம் செய்ததாக நம்பப்படுகிறது. திருமாலின் அம்சம், அவருடைய ஐந்து ஆயுதங்கள், ஆதிசேடன், சேனை முதலியார் ஆக எட்டு உறுப்புக்கள் இவ்வவதாரத்தில் பொருந்தியிருப்பதாகவும் ஒரு நம்பிகை நிலவுகிறது. இவையெல்லாம் வைணவ அடியார் வரலாற்றில் நம்மாழ்வாருக்குள்ள உயர்வையும் அவருக்கு அளிக்கப்பெறும் பணிவு கலந்த மதிப்பையும் காட்டுவனவாகும்.

காரியாருக்கும் உடைய நங்கையாருக்கும் பிறந்த குழந்தை பிற குழந்தைகளைப் போன்றதன்று. குழந்தைகள் பிறந்தவுடனே 'சட' என்ற ஒருபிராணவாயு அவைகளைச் சூழ்ந்து தாய் வயிற்றிலிருந்தபோது அவைகளுக்கிருந்த மெய்யுணர்வை மறைத்துவிடுகிறது என்ற ஒரு பொது நம்பிக்கையுண்டு. குழந்தையாகப் பிறந்தபோது நம்

மாழ்வாருக்கு இவ்வாறு நிகழவில்லை; அவர் இவ்வாயுவைக் கடிந்து நீக்கியதால் 'சடகோபர்' என்ற பெயர் பெற்றார். அழுதல், பாலுண்ணல், கைகால்களை யசைத்தல் போன்ற செயல்களின்றியிருந்த இக்குழந்தையைக் கண்ட பெற்றோர் வியப்பில் மூழ்கினர். பேச்சின்றி அமைதி, ஒளி, இனிமை விளங்க இக்குழந்தை இருந்தது. குழந்தையை என்ன செய்வதென்று பெற்றோர்களுக்குத் தெரியவில்லை பிறந்த பன்னிரண்டாம் நாள் திருநகரியில் உள்ள கோயிலுக்கு எடுத்துச் சென்றனர். பெருமானை வணங்கிப் பின் பிற குழந்தைகளினின்றும் மாறுபட்டிருந்த இக்குழந்தைக்கு மாறன் என்று பெயரிட்டனர். கோயிலருகிலிருந்த திருப்புளிய மரத்தடியில் பொன்னால் செய்து வைரமிழைத்த தொட்டிலில் குழந்தையைக் கிடத்தினர். இன்றும் காணக்கூடிய அந்தப் புளிமரம் ஆதிசேஷனின் அவதாரமாகக் கருதப்படுகிறது.

கண்களையும் வாயையும் திறவாமல் புளிமரத்தடியில் நம்மாழ்வார் பதினாறாண்டுகள் இருந்தார். தெரியாமல் இறைவனுக்குச் செய்த தவறு இதற்குக் காரணமாயிருக்கலாமென்று பெற்றோர்கள் நினைத்தனர். இறைவனின் பெருமையை உணரக்கூடிய ஒருவரும் தம்மிடம் வராமையால் நம்மாழ்வார் கண்களைத் திறக்கவோ பேசவோ தேவையில்லையென்பதை அவர்கள் அறியவில்லை. இறையன்பிலும் இறையுணர்விலும் மூழ்கி நம்மாழ்வார் சமாதி நிலையிலிருந்தார். ஆனால், காலப்போக்கில் நம்மாழ்வாரின் பெருமையையுணர்ந்தவரும் மிகுந்த பக்குவமடைந்திருந்தவருமான ஒருவர் வந்தார். இவரே மதுரகவியாழ்வார்.

திருக்குருகூரையடுத்த திருக்கோளூரில் மதுரகவி பிறந்தார். சேனை முதலியாரிடம் பணிபுரியும் குமுத கணேசரின் அவதாரமாக இவரைக் கருதுகின்றனர். வேதங்களையும் சமய நூல்கள் பிறவற்றையுங்கற்றிருந்த இவர், கவிபாடும் ஆற்றலுடையவராதலால் மதுரகவி யென்று பெயர் பெற்றார். திருமாலிடத்தில் இவருக்கு அன்பு பெருகவே திருப்பதிகளுக்கு யாத்திரையாகச் சென்றார். வடக்கே அயோத்தியையடைந்து அங்கே ஸ்ரீ இராமசந்திரர் கோயிலில் சில காலம் வழிபட்டு வந்தார். ஓரிரவு தம் பிறப்பிடமாகிய தென் திசையை நோக்க, பேரொளியைக் கண்டார். அது எங்கிருந்து உண்டானதென்பதைக் காண்பதற்காக அதை நோக்கிச் சென்றார். திருக்குருகூரையடைந்ததும் புளிமரத்தடியில் சமாதியிலிருந்த நம்மாழ்வாரிடமிருந்து ஒளியேற்பட்டதென்று கண்டார். சமாதியிலிருந்த உருவத்திற்கு உணர்வு உண்டோ இல்லையோ என்று பார்ப்பதற்காக ஒரு கல்லை எடுத்துப் போட்டார். நம்மாழ்வார் கண்களைத் திறக்க மதுரகவி அவர் உயிருள்ளவர் என்று உறுதி கொண்டார். பிறகு, ''செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?'' என்று நம்மாழ்வாரைக் கேட்க அவர், முதல் முறையாக வாய் திறந்து ''அத்தைத் தின்று அங்கே கிடக்கும்'' என்று பதில் சொன்னார். நம்மாழ்வாரிடம் பேரன்புகொண்டு அவரடி பணிந்து சீடராகத் தம்மை யேற்றுக்கொள்ளும்படி வேண்டினார். நம்மாழ்வார் அவருக்கு அருள் பாலித்துத் தமக்குப் பணிவிடை செய்வதற்குஇசைந்து வைணவ சமயத்தின் இரகசியங்களை உணர்த்தியருளினார்.

கருட வாகனத்தில் திருமக

ளுடன் பெருமாள் நம்மாழ்வாருக்குக் காட்சி கொடுத்தார். திருப்பதிகளில் எழுந்தருளியுள்ள பெருமானின் பல கோலங்களையும் கண்டார். இறைவன் புகழை அமுதினுமினிய பாசுரங்களில் பாடினார். வானவரும் முனிவர்களும் புளிமரத்தடியிலிருந்த மெய்யடியாரைக் காண்பதற்காக வந்தார்கள். மதுரகவி இப் பாசுரங்களுக்கு இசையமைத்து மக்களுய்யுமாறு பாடினார். முதலாயிரத்திலுள்ள கண்ணிநுண் சிறுத்தாம்பு என்ற பாசுரம் மதுரகவியால் தம் குருவைப் பற்றிப் பாடப் பெற்றது. மரத்தடியில் தியானத்திலிருந்து முப்பத்தைதாம் ஆண்டில் நம்மாழ்வார் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

நாலாயிரப் பிரபந்தத்தில் நம்மாழ்வாரியற்றிய திருவாய்மொழி மூன்றாவது ஆயிரமாக அமைந்துளது என்று முன்பு குறிப்பிட்டோம். திருவாய்மொழியைச் சாமவேதத்தின் சாரம் என்பர். நான்காம் ஆயிரத்திலுள்ள மற்ற மூன்று திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி ஆகும். இவை முறையே, ரிக், யஜுர், அதர்வ வேதங்களின் சாரம் என்பர்.

ஸ்ரீவைணவத்தில் கூறப்பெறும் அர்த்த பஞ்சகம் எனப் பெயரிய ஐந்து பொருள்களைப் பற்றி நம்மாழ்வார் தம் பாசுரங்களில் விளக்கிச் செல்கிறார். இவ்வைந்தாவன: (1) இறைவன், (2) உயிர், (3) நெறி, (4) வீடு, (5) வீடுபேற்றினுக்குத் தடையாயிருப்பது.

நாராயணனே பரம்பொருள், அவர் அனைத்தாம் நற்பண்புகளுக்கும் உறைவிடம். அவர் தீமையால் தொடக்குறாதவர். உயிர்களும் உலகமும் அவர் பண்புகள் (விசேஷங்கள்). உலகம் யாவையும் ஆக்குதல், நிலைபெறுத்தல், நீக்குதல் ஆகிய முத்தொழில் புரிகிறார். இப்பிரபஞ்சத் தொழில்கள் அவருடைய திருவிளையாட்டாகும் (லீலை), நாராயணனே எல்லாப் பொருள்களுக்கும் வித்தானவர்; பலதிறப்பட்ட உயிர்களுக்கும் பிறப்பிடம். அன்பர்கள் அவரைப் பல உருவங்களில் பல பெயர்களுடன் வழிபடுகிறார்கள். வெவ்வேறு கடவுளரைத் தாம் வணங்குவதாக அவர்கள் நினைக்கலாம். ஆனால் எல்லா வழிபாட்டிற்கும் பொருளானவர் நாராயணன் என்பதே உண்மை.

இறைவனிடம் தன்னை அறவே ஒப்புவித்தல் (பிரபத்தி) விடுதலைக்கு வழியாகும். வேறு நினைவின்றி உயிர் இறைவனிடம் தன்னை யொப்புவித்தல் வேண்டும். தன் முனைப்பு ஒரு சிறிதுமின்றி இடைவிடாது இறைவனையே நினைக்கவேண்டும். அவரிடம் அடைக்கலம்புகவேண்டும். அவரையே வாழ்க்கையின் தனிப்பெரும் நோக்கமாகக் கொள்ள வேண்டும். மிக எளிதானதும், பயன்மிக்கதும், அனைவருக்கும் பொதுவானதுமான நெறி இறைவனிடம் உயிர் தன்னை ஒப்புவித்தலே உயிர் இவ்வாறு செய்ததும் இறைவன் தன் அருள் நீராட்டி, தூய்மை செய்து, தடைகளை நீக்கி அதற்கு வீடுபேறு தருகிறார்.

இறைவன் பெருமையைப் பாடி, உயிர்கள் மீது அவர் கொண்டுள்ள இரக்கத்தால் மீண்டும் மீண்டும் அவதாரம் செய்வதை அன்பு ததும்பக் கூறுகிறார். பொய்நெறி நீங்கி இறைவனைச் சேருமாறு மக்களுக்கு உணர்த்துகிறார். பொருள் பெறுவதற்காகச் செல்வர்களைப் பாடுவதில் தம் திறனைப் பாழாக்காமல் இறைவனைப் பாடுவதில் தம் ஆற்றலைப் பயன்படுத்துமாறு

தம்மையொத்த கவிகளைக் கேட்டுக் கொள்ளுகிறார்.

கிருஷ்ணாவதாரமே நம்மாழ்வாரை மிகவும் கவர்ந்தது. இறைவனையடைய அவர் மேற்கொண்ட நெறி, தலைவன் தலைவியர் செல்லும் காதல் நெறியாகும். உயிரே இறைவனின் மணமகள். இறைவனே அதற்கு உண்ணும் சோறும், பருகும் நீரும், நுகரும் எல்லா இன்பமுமாவர். இறையன்பில் தலைநின்றவர் பிருந்தாவனத்துக் கோபியராவர். அவர்கள் முறையைப் பின்பற்றும் அநுபூதிமான்கள் இறைவனை நாடி அடைகிறார்கள். இறைவனைச் சேரமுடியாத பிரிவாகிய இருள் சூழ்ந்த இரவில் அவர்கள் வாடுகிறார்கள். இறைவனும் உயிர் வேட்கை கொண்டு தம்முடைய உறுப்பாகிய உயிரோடு மீண்டும் சேர விரும்பி ஏங்குகிறார்.

தாம் அடைந்த ஆழ்ந்த இறையனுபவத்தினால் நம்மாழ்வார் பாடுகிறார். தாம் பெற்ற இன்பத்தை தம்முடன் நுகர்ந்து பங்கு கொள்ள அனைவரையும் அழைக்கிறார். தெவிட்டாத இறை இன்பம் இருக்க (ஆராவமுது) எதற்காக மக்கள் துன்பத்தில் முடியும் நிலைபேறில்லா, சிற்றின்பத்திற்காக அலைகிறார்கள் என்று வியப்படைகிறார்! ○

# பிரதமர் இந்திரா

இன்று நம் நாட்டிலேயே மிக அதிகமாக உழைக்கும் அரசியல்வாதி இந்திரா காந்திதான் என்று துணிந்து சொல்லலாம். இவர் பிரதமர் என்னும் பொறுப்பில் இருந்து கொண்டு தம் கடமையைச் செய்யக் கடுமையாக உழைக்க வேண்டியதிருக்கிறது. இவர் தினமும் எவ்வளவு வேலைகளைக் கவனிக்க வேண்டும் என்பதை உணர்ந்தால் எல்லாருக்கும் வியப்பை அளிக்கும்! நம்பவே முடியாது!

வெளி நாடுகளிலிருந்தும், உள்நாட்டிலிருந்தும் தினமும் இவரைப் பார்க்க வரும் ஏகப்பட்ட தலைவர்களை இவர் வரவேற்று உபசரித்து, மனத்துக்குள் எவ்வளவு துன்பங்கள் இருந்தாலும், எல்லாவற்றையும் மறைத்துச் சிரித்துப் பேச வேண்டும். அவர்கள் கேட்கும் கேள்விகளுக்கும், பிரச்சினைகளுக்கும், உதவிகளுக்கும் சரியான பதில் தர வேண்டும்!



தினமும் இவர் தமது அலுவலகத்துக்குப் போயாக வேண்டும். முக்கியமான பைல்களை இவர் பார்த்தாக வேண்டும். இவருடைய முடிவை எதிர்பார்த்து மேஜையின்மீது குவிந்து கிடக்கும் அவசரப் பைல்களை இவர் பார்க்காமல் தப்ப முடியாது. 'மெடிகல் லீவ்' போட்டு விட்டுப் போய்விட முடியாது!

பார்லிமெண்ட் நடக்கும் போது, மற்ற மந்திரிகள் வந்தாலும் வராவிட்டாலும், பிரதமர் மிகக்கண்டிப்பாகப் பார்லிமெண்டுக்குப் போயாக வேண்டும். மேல் சபை, கீழ் சபை இரண்டும் ஒரே நாளில் நடந்தாலும், இரண்டுக்கும் ஒரே நாளில் போயாக வேண்டும். இது கடமை. பொறுப்பு!

இந்திராவுக்குத்தனது சொந்த வேலைகளைக் கவனிக்கக் கொஞ்சம் கூட நேரமில்லை. இதனால் இவர் சொந்த வேலைகள் என்று எதுவும் வைத்துக் கொள்வதில்லை. இவருடைய மகனுக்கு மணம் நடந்தபோதுகூட, திருமணத்துக்கு இரண்டு மணி நேரம்தான் இவர் தம் நேரத்தில் ஒதுக்கினர்! அவ்வளவு வேலைகள்! சொந்த வீட்டு முதல் கல்யாணத்தைக் கூட முழுசாக இவரால் கவனிக்க முடியவில்லை!

சமையல் செய்ய இவருக்கு நேரமில்லை. யாராவது இவரிடம் ''உங்களுக்குச் சமையல் செய்யத் தெரியுமா?'' என்றால், கேலியாகச் சொல்லுவார்: ''எனக்குச் சமைக்கவே பிடிக்காது! சாப்பிடத்தான் மிகவும் பிடிக்கும்!''



# சின்ன காந்தி

நிறவெறித் திமிர் பிடித்த அமெரிக்க வெள்ளைக் காட்டு மிராண்டிக் கூட்டத்தால் இழைக்கப்பட்டு வரும் கொடுமைகளுக்கு எதிராக நீக்ரோ மக்களை ஒன்று திரட்டி அண்ணல் காந்தியடிகளின் அறவழி நின்று போர் நடத்தி வெள்ளையர்களால் மறுக்கப்பட்டு வந்த பல உரிமைகளை நீக்ரோ மக்களுக்குப் பெற்றுத் தந்த உத்தமன் டாக்டர் மார்டின் லூதர் கிங் தனது மரணத்திலும் அண்ணல் காந்தியடிகளையே பின்பற்றியுள்ளார்!

மத வெறியன் ஒருவனுல் சுட்டுக் கொல்லப்பட்டார் அண்ணல் காந்தியடிகள். நிற வெறியன் ஒருவனுல் சுட்டுக் கொல்லப்பட்டார் டாக்டர் மார்டின் லூதர் கிங்.

''நமது போராட்டத்தில் இரத்த வெள்ளம் பெருக்கெடுத்து ஓடட்டும். ஆனல் அது நம்முடைய இரத்தமாக இருக்கட்டும். இது தான் இந்தியத் தந்தையின் இதய கீதமாகும். அந்த இனிய கீதத்தையே நாமும் இசைத்துப் பழக வேண்டும்''

என்று அமெரிக்க நீக்ரோ மக்களுக்கு அடிக்கடி நினைவுப்படுத்திக் கொண்டிருந்த அந்த உத்தமனின் இரத்தவெள்ளம் மெம்பிஸ் தெருக்களில் பெருக்கெடுத்து ஓடிப் பின் அங்கிருந்து அமெரிக்கா முழுவதுமாகப் பரவிப் பாய்ந்துக் கொண்டிருக்கிறது!

அந்தப் புனித இரத்தத்திற்குரிய ஆத்மாவைத் தன்னகத்தே கொண்டிருந்த குழந்தை மைக்கேல் லூதர் கிங் தனது ஆருவது வயது வரை இந்த உலகத்தில் நிறவேற்றுமை என்ற ஒன்று இருப்பதாக உணர்ந்தானிலன்.

அவனுக்கு ஆறு வயது முடிந்து ஏழாவது வயதை எட்டிப் பிடித்துக் கொண்டிருக்கும் போது வெள்ளைக்காரச் சிறுமி ஒருத்தியுடன் விளையாடிக் கொண்டிருந்

தான். அப்போது இவர்களுடன் மற்றொரு வெள்ளைக்காரச் சிறுவனும் வந்து சேர்ந்துகொண்டான் இதைக் கண்ட அந்த வெள்ளைக்காரச் சிறுவனின் தாயார் ஓடோடிச் சென்று மைக்கேல் லூதர் கிங்கைப் பார்த்து, ''சீ! கறுப்பு நாயே! உனக்கென்னடா இங்கு வேலை! ஈனப் பிறவியே! மரியாதையாக இங்கிருந்து ஓடிவிடு!'' என்று ஆத்திரத்தோடு திட்டித் துரத்திவிட்டுத் தனது மகனைப் பார்த்து, ''அந்தக் கறுப்பு நாயோடு உனக்கெதற்கடா சகவாசம்? இனி எப்போதாவது அந்தக் கறுப்பு நாயுடன் உன்னைக் கண்டால் எனக்குக் கெட்ட ஆத்திரம் வரும்'' என்று பொரிந்து கொட்டியவாறு தனது மகனை இழுத்துச் சென்றுவிட்டாள் அந்த வெள்ளைக்கார மாது!

தனது நெஞ்சில் ஆயிரக் கணக்கான ஊசிகள் வந்து ஒருங்கே பாய்ந்தது போன்ற வேதனையைச் சுமந்தவாறு வீட்டுக்குத் திரும்பிய சிறுவன் மைக்கேல் லூதர் கிங்கினைக் கண்ட அவனது தந்தை மார்டின் லூதர் கிங் சீனியர் தனது மகனுக்கு நேர்ந்த கசப்பான அனுபவத்தைக் கேட்டுப் புன்னகைத்து விட்டுப் பின் கிறிஸ்துவ மதத்தில் சீர்திருத்தப் புரட்சி செய்த புரொட்டஸ்டண்ட் கர்த்தாவான மார்டின் லூதர் பற்றிய விரிவான விளக்கமொன்றைக் கொடுத்துவிட்டு, ''இன்று முதல் உன் பெயரும் மார்டின் லூதர் கிங்'' என்று கூறி அனுப்பி வைத்தார்!

எந்தப் பருவத்திலும் கனவிலும் பிறருக்குத் தீங்கு நினைத்தறியாத பரம சாதுவான மார்டின் லூதர் கிங் தனது பதினைந்தாவது வயதில் அட்லாண்டாவிலுள்ள மூர் ஹௌஸ் கல்லூரியில் சேர்ந்து படித்துக் கொண்டிருந்தபோது ஹென்றி டேவிட் தோரேயின் சட்ட மறுப்பு இயக்கம் பற்றிய கட்டுரைகளையும் அண்ணல் காந்தியடிகளின் அறபோர் இயக்கக் கட்டுரைகளையும் படித்து வந்தார்.

உலகப் பேரறிஞர்களும் தத்துவ ஞானிகளுமான பிளேட்டோ, அரிஸ்டாட்டில் ரூஸோ, டால்ஸ்டாய் போன்றவர்களது நூல்களையும் படித்தார்.

அந்தச் சமயத்தில் ஹவார்டு பல்கலைக் கழகத்தின் தலைவர் டாக்டர் மார்டெகார் ஜான்ஸனால் நிகழ்த்தப்பட்ட காந்திஜி பற்றிய உரையைக் கேட்ட மார்டின் லூதர் கிங்கின் மனக் கண் முன்பு தனது ஏழாவது வயதில் நடந்த அந்தக் கசப்பான அனுபவம் நிழலாடியது. எனவே அப்போதே தனது எதிர்காலம் பற்றி ஒரு தெளிவான முடிவுக்கு வந்துவிட்டார்.

அமெரிக்கத் தென் மாநிலங்களில் வெள்ளை நிற வெறியர்களின் கொடுமைக்கு ஆட்பட்டுத் துடித்துக் கொண்டிருக்கும் இரண்டுகோடி நீக்ரோ மக்களைச் சம உரிமை பெற்ற அமெரிக்கக் குடிமக்களாக மாற்றவல்ல ஓரே ஒரு வழி அண்ணல் காந்தியடிகளின் அறப்போர் வழிதான் என்று அன்றே முடிவு செய்துகொண்டார் மார்டின் லூதர் கிங் ஜூனியர்.

அன்று முதல் அண்ணல் காந்தியடிகளால் எழுதப்பட்ட பல புத்தகங்களைத் தொடர்ந்து படித்து வந்தார். அதன் மூலம் சத்யாக்ரகம் என்ற அறப்போர் முறை பற்றி மிகத் தெளிவாகப் புரிந்து வைத்துக்கொண்டார்.

அன்று நூறு வெள்ளைக்கார மாணவர்களும் ஆறு நீக்ரோ மாணவர்களும் கொண்ட மாண

வர் சங்கத்திற்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார் மார்டின் லூதர் கிங். பின்னர், பாஸ்டன் பல்கலைக் கழகத்தில்சேர்ந்து படித்துக் கொண்டிருந்தபோதே பல தத்துவ நூல்களை எழுதி பி. எச்டி பட்டம் பெற்றார். அங்குதான் தனது வருங்கால மனைவியான கோரட்டா ஸ்காட்டையும் சந்தித்தார்.

குயிலினும் இனிய குரலும் இதயங்களைச் சுண்டி இழுக்கும் இசைத் திறனும் கொண்ட கோரட்டா ஸ்காட் வாய்ப் பாட்டில்மட்டுமின்றி, பியானோ, வயலின் ஆகிய கருவிகளை இசைப்பதிலும் வல்லவர். சங்கீதக் கல்லூரியில் படித்துப் பட்டம் பெற்றவர். திருமணத்திற்கு முன்பு பத்து ஆண்டுகள் உலக அரங்குகளில் அவரது இசைமுழக்கம் கேட்டது.

1953ஆம் ஆண்டில் மார்டின் லூதர் கிங்கை மணந்துகொண்ட பிறகு பதினைந்து மாதங்கள் சுதந்திரமாகத் தனது இசைக் கலையைக் கையாண்டு வநதார். அதன் பிறகு அலபாமாவிலுள்ள மாண்ட்கேமரிக்குச் சென்ற மார்டின் லூதர் கிங், அங்கு டெக்ஸ்டர் அவின்யூவிலுள்ள பாப்டிஸ்ட் சர்ச்சில் பாஸ்டராகப் பொறுப் பேற்றுக் கொண்டார். அதன் பிறகு கோட்டா ஸ்காட் தனது இசைக் கலையை இறைவனதுஆலயத்தில் மட்டுமே பயன்படுத்தி வந்தார்!

அப்போதுதான் மார்டின் லூதர் கிங்கின் வாழ்வில் மிகப் பெரியதொரு திருப்பம் ஏற்பட்டது.

பஸ்ஸில் வெள்ளையர்கள் ஏறினால் உடனே அதிலுள்ள கறுப்பர்களெல்லாம் எழுந்து நின்று கொள்ள வேண்டுமென்பது அலபாமாவின் சட்டம். அந்தச் சட்டத்தை மதிக்க மறுத்து வெள்ளையரைக் கண்டு எழுந்து நின்று இடங் கொடுக்க மறுத்துவிட்ட ரோஸா பார்க் என்ற நீக்ரோ வீராங்கனைமீது வழக்குத் தொடரப்பட்டுச் சிறையிலும் அடைக்கப்பட்ட போதுமாண்ட்கேமரியிலிருந்த நீக்ரோ மக்கள் ஆர்த்தெழுந்தனர். அவர்களை அமைதிப்படுத்தி அண்ணல் காந்தியடிகளின் வழியில் அழைத்துச் சென்று போர் நடத்தி வெற்றி கண்டார் மார்டின் லூதர் கிங். அதனைத் தொடர்ந்து அவர் நடத்திய அறப் போர் பலவற்றில் வெற்றி மேல் வெற்றியாகக் குவித்துக் கொண்டிருந்தார்.

வெறி கொண்ட வெள்ளையர்கள் கூட்டத்தால் பலமுறை தாக்கப்பட்ட மார்டின் லூதர் கிங், ஒரு முறை நீக்ரோ பெண் மணி ஒருத்தியால் குத்தப்பட்டார்! இசோலா வேர் கர்ரி என்ற 42 வயதாள நீக்ரோப் பெண்மணியொருத்தி அவரது மார்பில் கத்தியைப் பாய்ச்சினாள். 1958ஆம் ஆண்டில் ஏற்பட்ட இந்த விபத்திலிருந்து அவர் மீண்ட பின்பு பலமுறை அவரது உயிரைக் குறி வைத்துப் பலர் அலைந்து கொண்டிருந்தனர்!

இதற்கிடையில் பதினான்கு முறை சிறை சென்று மீண்டுள்ளார். ஒரு சமயம் அவரது இல்லம் வெடி குண்டு வைத்துத் தகர்க்கப்பட்டது. அதிலிருந்த அவரது மனைவியும் குழந்தைகளும் உயிருக்கு ஆபத்தின்றித் தப்பினார்கள்.

கிங்கின் இல்லம் வெள்ளையர்களால் வெடி வைத்துத் தகர்க்கப்பட்டது என்பதைக் கேள்விப் பட்டதும்,வெள்ளையர்களைப் பழிக்குப் பழி வாங்க வேண்டுமென்று குமுறியெழுந்த நீக்ரோ மக்களை அமைதிப் படுத்தி,

தொடர்ந்து அற வழியில் நடத்திச் சென்று, பல போராட்டங்களை நடத்தி, நீக்ரோக்களுக்கு மறுக்கப்பட்டு வந்த பல உரிமைகளைப் பெற்றுத் தந்தார்.

பஸ்களிலும் பணிமனைகளிலும் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் உணவு விடுதிகளிலும் நிலவி வந்த நிறப் பாகுபாடுகள் உடைத்தெறியப்பட்டு வெள்ளையர்களுடன் நீக்ரோக்களும் சமமாக அமர வாய்ப்பேற்பட்டது.

பின்னர் 1963ஆம் ஆண்டில் மாண்ட்கமரியிலிருந்து நடத்திய சம உரிமைக் கோரிக்கைப் படையொன்றை நடத்திச் சென்று வாஷிங்டனில் உள்ள ஆப்ரஹாம் லிங்கனின் சிலைக்கெதிராக உரிமைப் பிரகடனம் செய்தார். அதன் பயனாக அமெரிக்காவில் பல்வேறு மாநிலங்களில் சிதறுண்டு வெள்ளைக் கொடுங்கோன்மைக்கு ஆட்பட்டுக் கிடந்த நீக்ரோ மக்கள் ஒரே அணியாகத் திரண்டெழுந்து நின்றனர். அதன் விளைவாகத்தான் தென் மாநிலங்களில் வாக்குரிமை மறுக்கப்பட்டு வந்த நீக்ரோக்களுக்கும் வாக்குரிமை வழங்க வகை செய்யும் சட்டம் இயற்றப்பட்டது. என்றாலும் தன் மாநிலங்களின் திமிர் பிடித்த வெள்ளை ஆதிக்கம் அந்தச் சட்டத்தை மதிக்க மறுத்து வந்தது! அத்துடன் வெள்ளையர்கள் வாழும் பகுதியில் நீக்ரோ மக்கள் குடியிருக்கக் கூடாது என்ற சட்டத்தையும் மிகக் கடுமையாக அமுல் நடத்தி வந்தது!

எனவே மார்டின் லூதர் கிங்கின் அறப்போரும் தொடர்ந்தது. அதன் விளைவு வெள்ளை நிற வெறிக் காட்டுமிராண்டி ஒருவனது துப்பாக்கிக் குண்டுக்கு அவரது உயிர் இரையானது! கடந்த நான்கு ஆண்டுகளுக்கு முன்பு தனது முப்பத்தி ஐந்தாவது வயதில் எதற்காக நோபல் பரிசு பெற்றாரோ அதற்காக இன்று அவரது முப்பத்தியொன்பதாவது வயதில் துப்பாக்கிக் குண்டொன்றைப் பரிசாகப் பெற்றுக் கொண்டு நம்மிடமிருந்து விடை பெற்று விட்டார்!

நன்றி—தமிழ் சினிமா

# சக்தியும் பயனும்



சி. சுப்பிரமணியம்

இன்று உலகில் பெரும் பெரும் மாற்றங்கள் ஏற்பட்டு வருகின்றன. தொழில் முன்னேற்றமும், விஞ்ஞானக் கண்டு பிடிப்புகளும் மனித வாழ்க்கை முறைகளையே மாற்றி வருகின்றன. இந்த மாற்றங்களிலிருந்து ஒதுங்கியிருக்க முடியாதபடி, உலகின் ஒவ்வொரு பகுதியும் ஒன்றோடொன்று இணைந்து இருக்கின்றது. ஆகையால் நம் நாடும் மற்ற நாடுகளின் ஓட்டத்தையொட்டிச் செல்லத்தான் வேண்டும்.

உலகின் முன்னேற்ற வேகம் என்பது, ஏற்கெனவே முற்போக்கடைந்துள்ள நாடுகள் மேலும் மேலும் அடையும் முன்னேற்றத்தின் அளவைக் கொண்டுதான் கணக்கிடப் படுகிறது. எனவே நாம் அந்த வேகத்தை எட்டிப் பிடிக்க வேண்டுமானால், மிக மிகத் துரித கதியில் சென்றாக வேண்டும்.

இந்த அடிப்படை நோக்கத்துடன்தான் நாம் ஒன்று, இரண்டு, மூன்று என்று வரிசையாக ஐந்தாண்டுத் திட்டங்களை வகுத்துச் செயல்படுத்தி வருகிறோம்.

ஒரு நாடு முன்னேற்றம் அடைவது அவசியம் என்பதற்குக் காரணம் சொல்லத் தேவையில்லை. ஆனால் விஷயமறிந்தவர்கள் எனக் கருதப்படும் சிலர் கூட ''முன்னேற்றம் எதுவும் தேவையில்லை, இருப்பது இருக்கிறபடி இருந்தால் போதும்'' என்பதாகப் பேசி வருவதால் உலகின் போக்கையும், நம் நாட்டின் நிலையையும் எடுத்துணர்த்தி, ஒப்பிட்டுக் காட்ட வேண்டியதிருக்கிறது.

## பழம் பெருமை பலன் தருமா?

கலாச்சார, ஆன்மீகத் துறைகளில் நமக்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு என்பது உண்மை. ஏன்? பொருளாதாரத் துறையில்கூட, நாம் ஒரு காலத்தில் சிறந்து விளங்க வில்லையா, நம் முன்னோர்கள் கடல் கடந்து சென்றும் வாணிபம் செய்யவில்லையா, மற்றவர்கள் மரவுரி தரித்துக் காட்டுமிராண்டி வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருந்த நேரத்தில், நம்மவர்கள் மெல்லிய ஆடைகளை நெய்து உடுத்தும் அளவுக்கு நாகரிக வாழ்க்கை வாழ வில்லையா என்று கேட்கலாம். இல்லை என்று சொல்லவில்லை. ஆனல் பண்டைய பெருமையையே பேசிக் கொண்டிருப்பதால் பயனில்லை. இன்றைய நிலை என்னவென்பதையும் பார்க்க வேண்டும்.

காட்டுமிராண்டிகள் எனச் சொல்லப்பட்ட மக்கள் வாழ்ந்த பகுதிகளில் பல—குறிப்பாக மேல் நாடுகள்—கடந்த சில ஆண்டுகளில் மிகப் பெரும் அளவுக்கு முன்னேற்றம் அடைந்து விட்டன. நம்மையெல்லாம் பின் தள்ளி வெகுதூரம் சென்று விட்டன. அதே காலத்தில், நம் நாட்டில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் எதுவும் ஏற்படவில்லை என்பது மட்டுமல்ல, தொழில், கலைத்துறைகளில் நம்மவர் பெற்றிருந்த திறமை, கை நுட்பத் தேர்ச்சி தேய்ந்து விட்டதையும், சிலவற்றில் அடியோடு மறைந்து போய் விட்டதையும் காண்கிறோம். மேல் நாடுகளில் தொழில் புரட்சி ஏற்பட்டு, இயந்திரச் சாதனங்களின் உதவியால் மக்கள் தம் வாழ்க்கை வசதிகளைப் பெருக்கிக் கொண்ட நேரத்தில், நம் மக்களிடையே எவ்விதச் சலனமும், மாற்றமும் ஏற்படவில்லை என்பதைக் காண்கிறோம்.

## முன்னேற்றப் பணி

இதற்குக் காரணம், நம்மக்கள் முன்னேற்ற ஆர்வமே இல்லாமல் இருந்து விட்டார்கள் என்பதல்ல பன்னெடுங் காலத்திற்கு முன்பே நாகரிக வாழ்வு வாழ்ந்தோம் என்ற பெருமையுணர்வில், உலகின் மற்றப் பகுதிகளில் ஏற்பட்ட முன்னேற்றங்களைப் பற்றி அதிகம் கவலைப்படாமல் இருந்திருக்கக்கூடும். எனினும் அதைவிட முக்கியமான காரணம், நம் நாட்டில் ஒரு ஜனநாயக அரசாங்கம் இல்லாதிருந்ததுதான். அத்தகைய ஓர் அரசாங்கம் இருந்திருந்தால், நாட்டு முன்னேற்றத்திற்கான திட்டங்களை வகுக்கவும், மக்களிடையே ஓர் உற்சாகத்தை, உத்வேகத்தை உருவாக்கி, மக்களது சக்திகளையெல்லாம் ஒன்று திரட்டி அத்தகைய முன்னேற்றப் பணியில் ஈடுபடுத்தியிருக்கவும் முடிந்திருக்கும்.

அந்நிய ஆட்சி அகன்று, இப்போது நம் நாட்டில் சுதந்திர அரசாங்கம் ஏற்பட்டுள்ளதால் தான் இன்று அத்தகைய முன்னேற்றப் பணி மேற்கொள்ளப் பட்டிருக்கிறது. நெடுங்காலமாகக்குறிப்பிடத்தக்கவகையில் ஒன்றுமே செய்யப்படாமல் இருந்ததால், இன்று முன்னேற்ற முயற்சி என்பது பிரம்மாண்மான அளவில் செய்யப்பட வேண்டியதிருக்கிறது. அதையும் ஓர் ஒழுங்கு முறையோடு செய்தாக வேண்டும். இத்தனை காலம் கட்டுண்டிருந்தோம். இனி நாம் விரும்புகிறபடி யெல்லாம் முன்னேற்றம் காண உரிமையும், வாய்ப்பும் இருக்கிற

தென்பதால், கட்டவிழ்த்து விடப்பட்ட காளை போலச் செயலாற்றக்கூடாது.

### சக்தி பயன்பட

காட்டாற்று வெள்ளத்தில் அடங்கியுள்ள சக்தியும் பயனும் பிரம்மாண்டமானது தான். ஆனால் அதை அணை கட்டித் தேக்கி, கால்வாய்கள் மூலம் வேண்டிய இடங்களுக்கு, உரிய முறையில் நீரைப் பாய்ச்சினால் தான் பலனை முழுமையாக அனுபவிக்க முடியும். அதே போல் நம் மக்களிடையே நிறைந்திருக்கும் பல்வேறு சக்திகளை யெல்லாம் முறைப்படுத்தி, வகைப்படுத்திப்பயன்தரும் வகையில் திருப்பிவிட வேண்டும்.

திட்டமிட்ட முன்னேற்றத்தின் கோட்பாடு அதுதான். அந்த முறையில் பார்க்கும்போது, நம்மிடமுள்ள சக்திகள் என்னென்ன? அவற்றைப் பயன்தரும் வகையில் பயன்படுத்த நாம் எடுத்து வரும் நடவடிக்கைகள் என்னவென்பதைக் கவனிக்க வேண்டும்.





# காந்திஜியின் கருத்துக்கள்

*நிரந்தர சமாதானத்தை அடைய முடியும் என்பதில் நம்பிக்கை கொள்ளாவிட்டால், அது மனித இயல்பின் தெய்விகத் தன்மையில் அவநம்பிக்கை கொள்ளுவதாகும்.

*வல்லரசுகள் ஆயுத ஒழிப்புச் செய்யத் தைரியமாக முன்வந்தாலொழிய சமாதானம் கிட்டப் போவதில்லை. சமீபத்தில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் வல்லரசுகளுக்கு இந்த நம்பிக்கையை நிர்ப்பந்தமாக ஊட்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. அரை நூற்றாண்டு காலம் அஹிம்ஸையை விடாமல் அனுஷ்டித்து வந்த பிறகு அஹிம்ஸையின் மூலம்தான் மனித வர்க்கத்தைக் காப்பாற்ற முடியும் என்று எனக்கு நிச்சயமாகப் படுகிறது.

*சுரண்டல் புத்தி ஒழிந்த மாத்திரத்தில், ஆயுதங்கள் யாவும் தாங்க முடியாத சுமையாகத் தோன்றிவிடும். தேசங்கள் பரஸ்பரம் ஒன்றை ஒன்று சுரண்டுவதை நிறுத்தினாலொழிய உண்மையான ஆயுத ஒழிப்பு நடைபெறாது.

*உலகத்தில் நான் யாருக்காகவும் பயப்படமாட்டேன். கடவுளுக்குத்தான் பயப்படுவேன். யார்மீதும் நான் கெட்ட எண்ணம் கொள்ளமாட்டேன். யாருடைய அநீதிக்கும் நான் உண்மையினால் பொய்யை வெல்லுவேன்! பொய்யை எதிர்த்துப் போராடுவதில் நான் சகல துன்பங்களையும் எதிர்த்துப் போராடுவேன்.

*சத்தியாக்கிரகிக்குக் கால வரம்பு எதுவும் கிடையாது. அதேபோல, துன்பத்தைத் தாங்கிக் கொள்ளுவதில் அவனுக்குள்ள ஆற்றலுக்கும் வரம்பில்லை. இதனால்தான் சத்தியாகிரகத்தில் தோல்வி என்ற சமாச்சாரமே கிடையாது!

*நான் என்ற அகந்தையை ஒழிப்பது, மிகமிகப் பணிவோடு நடந்து கொள்வது, அதிகமான பொறுமை காட்டுவது, தெளிவான நம்பிக்கையோடிருப்பது. இந்தக் குணங்களெல்லாம்உடையதுதான் சத்தியாக்கிரகம். சத்தியாகிரகத்துக்கு உரிய சன்மானம் சத்தியாக்கிரகமே.

*சத்தியாக்கிரகத்தில், பொய் பித்தலாட்டங்களுக்கு இடம் இல்லை. இன்று உலகத்தில் பொய்யும் பித்தலாட்டமும் தாம் நிறைந்திருக்கின்றன. இந்த மாதிரியான நிலைமையை நான் கையைக் கட்டிக்கொண்டு பார்த்துக்கொண்டிருக்க முடியாது. இன்று அப்படி இருந்தேனானால், உலகை நெருப்புச் சூழ்ந்து கொண்டிருக்கும்போது, கடவுள் எனக்குக் கொடுத்துள்ள செல்வத்தை நான் உபயோகிக்காத காரணத்திற்காக என்னை அவர் தண்டிப்பார்.

—தொகுத்தது:
மேவானி கோபாலன்

''நொண்டிப் புலி'' என்றும், தாமர்லேன் என்றும் 'பாவி'கள் குறிப்பிட்ட தைமூரின் கதை இது. வையமுழுவதையும் பொடி சாம்பலாக்க முனைந்தவனின் கதை இது.

தைமூரின் காலடியில் ஐம்ப தாண்டு ''காலம்'' மிதியுண்டு கிடந்தது, எண்ணற்ற பல நக ரங்களும், அரசுகளும். அவனது இரும்புப் பாதத்தில் நசுக்குண் டழிந்தன எண்ணற்ற அரசுகள். தைமூர் சென்ற நானுதிசைகளி லும் குருதி வெள்ளம் அலைவீசி ஓடிற்று.

ஜிஹாங்கிர்.....அவனது ஆரு யிர்ச் செல்வன். அருமருந்தன்ன தன் புதல்வனை விழுங்கிய மர ணத்தைப் பழி தீர்ப்பதற்காகத் தன்னால் வெற்றி கொள்ளப் பட்ட நாடுகளிலுள்ள மக்களைக் கொன்று மலைமலையாகக் குவித் தான்.

தைமூரின் புலல்வன் ஜிஹாங் கிர் இறந்தபோது சாமர்க்ந்தின் மக்கள் கறுப்புடை அணிந்து தமது சிரங்களில் தூசும், சாம் பலும் படிந்த தோற்றத்துடன் தைமூரைச் சந்தித்தனர். அன்று முதல் ஓட்டரேரே என்னும்

---

# உலகத்தின் இதய கீதம்

**மாக்ஸிம் கார்க்கி**

---

ஊரில் தங்கினுன். அந்திமநாள் வரும்வரை அவன் முகத்தில் இளஞ்சிரிப்புக்கூட மலரவில்லை. இதயத்தில் ஒரு துளி இரக்கத் துக்கும் இடந்தராமல், கடுகடுத் துச் சினம் பொங்கும். முகத் தோடு, வணங்காமுடியனுக முப் பதாண்டு காலமிருந்தான் தைமூர்!

உலகிற்கு இரத்தவெறி பிடித்த சாபக்கோடாகத் தோன்றியவன் சாவின் சேவகன், தைமூர், ஒரு தாயின் முன்னிலையில் எவ்வாறு தலைவணங்கி நின்முன் என்ப தைக் கூறும் கதை இது:

* * *

கனிகுலா பள்ளத் தாக்கிலே ஒரு நாள்...

மல்லிகைப் பூக்களும், ரோஜா மலர்களும்அங்குச் சரஞ்சரமாகப் பூத்துக் குலுங்கின. சாமர்க்கந் துக் கவிஞர்கள் அந்தப் படுகை யை 'மலர்ப் படுகை' என்று புகழ்வார்கள். நகரில் நெடி தோங்கி நின்ற மசூதிகளின் மாடங்கள் தொலைவிலே தெரிந்தன.

தைமூர் பெக், எழில்மிகு பட் டங்கி அணிந்திருந்தான். விலை மதிக்க ஒண்ணுத முத்துச் சர மோடிய அங்கி அது. அதில் தைக் கப்பட்டிருந்த முத்துக்கள் ஐயா

யிரத்துக்குக் குறையாது! அவனது நரைத்த தலைமீதணிந்திருந்த தொப்பியில் கோக்கப்பட்டு அசைந்தாடிய சிவந்த மாணிக்க மணியானது உலகை அளந்தறியும் பயங்கரமான சிவப்பு விழிபோலத் தோன்றிற்று.

கூடாரத்தின் தரைமீது விரிக்கப்பட்டிருந்த இரத்தின ஜமுக்காளத்தின் அழகு, நெஞ்சை அள்ளியது. முன்னூறு தங்க ஜாடிகள் அந்த விரிப்பின் மீது வைக்கப்பட்டு இருந்தன. அத்தனையிலும் திராட்சை மதுரசம்! இராஜ விருந்துக்கான ஏற்பாடுகள்!

தைமூருக்குப் பின்னால் சற்று ஒதுங்கி இசைவாணர்கள் வீற்றிருந்தனர். அவனுக்கு அருகே யாரும் இல்லை. தைமூரின் காலருகே அவனது உறவினர்கள், அரசர்கள், இளவரசர்கள், தளபதிகள் அமர்ந்திருந்தார்கள். உலகை அழித்தொழிக்கும் அந்த மன்னனுடன் அந்தக் கூட்டத்தினருள் கவிஞர் கிர்மானியும் இருந்தான்.

''கிர்மானி'' என்றழைத்துக் கவிஞனிடம் பேசத் தொடங்கினான் தைமூர்.

''என்னையே நான் விற்பதானால் நீ என்ன விலை கொடுப்பாய்?''

''இருபத்தைந்து அஸ்கர்கள் தருவேன்'' என்றான் கவிஞன்.

''என் இடுப்பில் அணிந்துள்ள கச்சைக்கே அந்த விலையாகுமே!'' என்று வியப்புடன் கேட்டான் தைமூர்.

''அதற்குத்தான் அந்த விலை மதிப்பு. தங்கள் விலை மதிப்பு ஒரு செப்பு நாணயம் கூடப் பெறாது!''

உலகுக்கே, அழிவூட்ட வந்த வனான் அந்த அரசர்க்கரசன் முகம் நோக்கிக் கவிஞன் கிர்மானி இவ்வாறு கூறினான். மெய்ம்மையின் நண்பன். அவன் புகழ் நெடிது வாழ்க!

திகிலும் திகைப்பும் நிலவிய அமைதியற்ற வேளை அது!

கோடையிடி முழக்கும் முகிலிடையிருந்து மின்னற் கோடு கீறி எழுவது போல, திகில் நிறைந்த அந்தச் சூழ்நிலையின் அமைதி கலைத்து ஒரு குரல் ஆணவ ஓலம் ஒலித்தது அதிலே மரணத்தால் தாக்குண்ட ஆன்ம வேதனை கலந்திருந்தது. உயிர் வாழும் மனிதர் அனைவரையும் அடியோடு வெறுக்கும் அந்தக் குரல் சுல்தான் பேயசித்தை வெற்றி கொண்ட தைமூரின் செவியில் பாய்ந்தது.

''யாரது? பாருங்கள்'' பேரரசன் தைமூர் கட்டளையிட்டான்.

''எவளோ ஒருத்தி பைத்தியம் போலிருக்கிறது அழுக்குப் படிந்த தோற்றம். கந்தல் உடை. அராபிய மொழி பேசுகிறாள். உலகு முழுவதையும் தன் கொற்றக்குடை நிழலில் ஆளும் பேரரசனைக் காண வேண்டுமென்று அடம்பிடிக்கிறாள்!'' என்று பதில் கிடைத்தது.

''அவளை உள்ளே அழைத்து வா!''

பெண் ஒருத்தி தைமூரின் முன்பு வந்து நின்றாள்.

சாயம் மங்கிப்போன ஆடை. அதுவும் கந்தல். அவளது கரிய நிறங்கொண்ட கூந்தல் அவிழ்ந்து மார்ப் பகத்துக்குத் திரையிட்டு மறைத்தது. கண்களிலே சினம் பொங்கிற்று. முகம் சிவந்து தோன்றிற்று அந்த நொண்டிச்

சக்கரவர்த்தி எதிரே நின்று தன் கரத்தை நீட்டினாள். அந்தக் கை சற்றும் நடுங்காமல் உறுதியுடன் நின்றது.

''பெயசித் சுல்தானை வெற்றி கொண்டது தாங்கள் தானே?''

''ஆம். அது மட்டுமல்ல, பெற்ற வெற்றிகள் பல. ஆனால் வெற்றிகளில் இன்னும் எனக்கு அலுப்புத் தட்டவில்லை! பெண்ணே, உனக்கு என்ன வேண்டும்?''

''சொல்லுகிறேன் தாங்கள் என்ன செய்திருப்பினும் சரியே, தாங்கள் ஓர் ஆண்மகன்தான். நான் ஒரு தாய். தாங்கள் மரணத்துக்குச் சேவை புரிகின்றீர்கள். நான் வாழ்க்கைக்கு மனித ஜீவியத்துக்குச் சேவை யாற்றுகிறேன். தாங்கள் எனக்குப் பாவமிழைத்து விட்டீர்கள். எனவே அது குறித்து முறையிட்டுப் பரிகாரம் கோர நான் வந்திருக்கிறேன். 'நீதி. வலிமையில் அடங்கியுள்ளது' என்ற கொள்கையுடையவர் என்று தங்களைப்பற்றிக் கூறுகிறார்கள். நான் அதை நம்பவில்லை. நான் ஓர் அன்னை. எனவே தாங்கள் எனக்கு நீதி வழங்கத்தான் வேண்டும்''

துணிச்சல் மிக்க இந்த சொற்றொடர்களுக்குத் துணைபுரிந்த ஆற்றல் எது என்பதை அந்த அரசன் உணர்ந்தான்.

''உட்கார்ந்து பேசு, நீ என்ன சொல்லுகிறாய்?''

அரசர்கள் புடை சூழ்ந்து அமர்ந்திருந்த அந்த இரததினக் கம்பளத்தின் மீது அவர்களிடையே அவள் வசதியாக அமர்ந்து பேசத் தொடங்கினாள்.

''நான் சால்னோ பிராந்தியத்தைச் சேர்ந்தவள். அது இத்தாலியில் வெகு தொலைவிலிருக்கிறது. அந்தப் பகுதிகள் தங்களுக்குத் தெரியாதவை. என் தந்தையும் கணவனும் மீனவர்கள். என் கணவர் அழகு மிக்கவர். அவர் மிக்க மகிழ்ச்சியுடன் வாழ்ந்தார். அவருக்கு இன்பமளித்தவள் நான்தான். எனக்கு ஒரு புதல்வன் இருந்தான். உலகிலேயே அழகு மிக்க குழந்தை''

''என் ஜிஹாங்கீரைப் போல'' அந்தப் போர் வீரன் முணுமுணுத்தான்.

''என் குழந்தை அழகு நிறைந்தது. மதிநுட்ப மிக்க சிறு குழந்தை அவன். அரபு நாட்டுக் கடற்கொள்ளைக்காரர்கள் எங்கள் கடற்பகுதிக்கு வந்தபோது அவனுக்கு ஆறு வயதுதான். அவர்கள் என் தந்தையையும், கணவனையும் சிரச் சேதம் செய்தனர். மற்றும் பலரும் கொலை செய்யப்பட்டார்கள். என் அருமைச் சிறுவனையும் தூக்கிச் சென்று விட்டார்கள். என் அன்புச் செல்வத்தைத் தேடி நான் கடந்த நான்காண்டுகளாக இந்த உலகமெல்லாம் சுற்றி அலைகிறேன் இப்போது அவன் தங்களிடம் இருக்கிறான். இது எனக்குத் தெரியும் பெயசித சுல்தானுடைய ஆட்கள் அந்தக் கடற்கொள்ளையரைப் பிடித்தார்கள். தாங்கள் சுல்தானை வெற்றி கொண்டு அவரது உடைமைகளைக் கைப்பற்றியிருக்கிறீர்கள். ஆகவே என் புதல்வன் எங்கிருக்கிறான் என்பது தங்களுக்குத் தெரிந்திருக்கும், அவனைத் திருப்பிக்கொடுங்கள்'' என்று அழுத்தமாகக் கூறினாள் அன்னை!

''அவளுக்குப் பைத்தியம்'' என்று பரிகசித்துச் சிரித்தனர், தைமூரின் நண்பர்களான அரசர்களும், பிரதானிகளும், தளபதிகளும்!

ஆனால் சமாதானத்துக்கு வெம் பகைவனாக விளங்கிய தைமூர் பேசினான்.

''பெண்ணே! கண் காணாத அந்தப் பிரதேசத்திலிருந்து கடல்களையும், நதிகளையும், நெடுமலைகளையும் இருளடர்ந்த கானகங்களையும் கடந்தும் நீ எப்படி இங்கு வந்தாய்? வனவிலங்குகளிடமிருந்தும், அவற்றினும் கொடிய மனிதர்களிடமிருந்தும் நீ எப்படித் தப்பித்தாய்? திக்கற்றவர்களுச்கு ஒரே துணையாகவும், நம்பகமானதாகவும் விளங்குகின்ற எந்த ஓர் ஆயுதமுமில்லாமல் நீ எவ்வாறு சுற்றித் திரிய முடிந்தது? உன் மீது நான் நம்பிக்கை கொள்ளுவதற்கு இதை நீ எனக்கு தெளிவு படுத்த வேண்டும்''

இடையூறுகளுக்கெல்லாம் அப்பாற்பட்டதான தாய்மையின் அன்பைப் போற்றிக் கூறுவோம். உலகனைத்தையும் ஊட்டி வளர்க்கும் அன்னையின் பெருமையைப் பாடி மகிழ்வோம். மனிதனிடத்தே பொலியும் எழில் வளம் யாவும், பகலவனின் ஒளிக்கற்றைகளிலிருந்தும் தாய் கனிந்து ஊட்டிய பாலிலிருந்தும் பெறப்பட்டவை ஆகும். நமக்கு வாழ்வின் பாசத்தை உணர்த்துவதும் இதுவே.

அவள் கூறினாள்: ''நான் சுற்றி அலைந்தபோது இடையிலே ஒரு சமுத்திரம் என்னை எதிரிட்டது அதிலே பல தீவுகளும், மீன்பிடி படகுகளும் இருந்தன. அன்புக்குரியவனைத் தேடிச் செல்லும்போது காற்றும் துணை புரியும். கடற்கரையிலே பிறந்து ஆளானவர்களுக்கு நதியில் நீந்துவது ஒரு பொருட்டல்ல. மலைகளைப் பற்றியா கேட்டீர்கள்? நான் கவனிக்கவே இல்லை! அடர் வனங்கள் பல இருந்தன. காட்டுப் பன்றிகள், கரடிகள், சிங்கங்கள் எத்தனையோ எதிர்ப்பட்டன. காளைகள் பயங்கரமாகத் தலையைக் குத்தியபடி ஓடி வந்தன. சிறுத்தைப் புலிகள் இரண்டு முறை என்னை உற்று நோக்கின. அவற்றின் கண்கள் தங்கள் கண்களைப் போன்று விளங்கின. ஆனால் விளங்குகளுக்கும் இதயமிருக்கிறது. தங்களுடன் பேசுவது போலவே நான அவற்றுடனும் பேசினேன். 'நான் ஒரு தாய்' என்று நான் கூறியதை அந்த விலங்கினங்கள் நம்பின. என்மீது கொண்ட இரக்கத்தால் அவை பெருமூச்சுவிட்ட வண்ணம் தம் வழியே சென்று விட்டன. மிருகங்களும் கூடத் தமது குட்டிகளை நேசிக்கின்றன என்பதும், தமது உயிரைக் காத்துக்கொள்வதற்காகவும் சுதந்திரத்தைக் காத்துக் கொள்வதற்காகவும் மனிதனுக்கு நிகராக அவை மிகத் திறமையுடன் போராட உணர்ந்துள்ளன என்பதையும் தாங்கள் அறிவீர்கள் அல்லவா?''

''நன்று சொன்னாய் பெண்ணே'' என்றான் தைமூர். ''விலங்குகள் மிக உறுதியுடன் நேசிக்கின்றன என்பதும் மனிதனைவிடக் கடுமையாக, உறுதியாகப் போராடுகின்றன என்பதும் எனக்குத் தெரியும்'' என்று அந்தச் சக்கரவர்த்தி உறுதியுடன் கூறினான்.

அவள் தொடர்ந்து பேசினாள்.

''ஆண்கள் அனைவரும் தமது அன்னையர்க்கு எப்போதும் குழந்தைகள் தாம். ஒவ்வொருவருக்கும் அன்னையுண்டு. ஒவ்வொருவனும் தாயொருத்திக்கு மகனாக இருப்பவனே. சச்கரவர்த்தியே! தாங்களும் பெண்ணொருத்திக்கு மகன் தான். தாங்கள் கடவுளைக்கூட மறுத்து விடலாம். ஆனால் இதை மறுக்க முடியாது. எனக்கு என்

அன்பு மகனைத் தந்துவிடுங்கள். நான் அவனை ஈன்றவள். அவனை நேசிப்பவள்''

மோசசையும், முகமதையும், கொடியோரால் கொலையுண்ட இயேசுவையும் ஈன்றளித்த தாய்மையைப் போற்றி வணங்குவோம்.

மகத்தான மனிதர்களை ஈன்றளிக்கும் அன்னையை வணங்குவோம். அரிஸ்டாடில், பர்தூசி, சாதி, ஓமர்கயாம், இஸ்கந்தர், அந்தகரான ஹோமர் இவர்கள் அனைவரும் அவள் ஈன்ற குழந்தைகளே. அவர்கள் அனைவரும் அவளது மார்பகத்தே சுரந்த அமுதுண்டு வளர்ந்தவர்கள் தாம். அவர்களது பிஞ்சுக்கரம் பற்றி உலகிற்கு அழைத்து வந்து காட்டியவள் அன்னைதான். உலகின் பெருமையனைத்தும் அன்னையரிடமிருந்து பெறப்படுவனவே.

தைமூர் — குருகான் நரை முதிர்ந்த நொண்டிப்புலி எண்ணிலாத நகரங்களைப் பொடி சாம்பலாக்கிய மன்னன்-சிந்தனையில் மூழ்கினான்.

நீண்ட நேரம் மௌனம் நிலவியபின் தன்னைச் சூழ்ந்திருப்பவர்களை ஒருமுறை பார்த்துவிட்டுக் கம்பீரமாகக் கூறத் தொடங்கினான்:

''கடவுளின் சேவகனாகி நான் கூறவேண்டியது இது. என் முன்னிலையில் ஒரு பெண் அமர்ந்திருக்கிறாள். இதுவரை நான் சற்றும் அறிந்திராத உணர்வுகளை இவள் என் ஆன்மாவில் கிளர்ந்தெழச் செய்திருக்கிறாள். இவள் என்னெதிரே சரிசமானமாக நின்று பேசுகிறாள். அவள் இறைஞ்சவில்லை. மன்றாடவில்லை. நிர்ப்பந்தமாகக் கோருகின்றாள். இவள் ஏன் இத்தனை வலுவுடன் விளங்குகிறாள் என்பதை நான் புரிந்துகொண்டேன். அவள் நேசிக்கின்றாள். அன்பு பாலிக்கின்றாள். இவளது வாழ்வின் ஒளிப்பொறி அவளது குழந்தைதான். என்பதையும் பற்பல நூற்றாண்டுக் காலம் வரை நின்று சுடர் வீசும் ஒளிச் சோதியை அந்தச் சிறு ஒளிப் பொறி மூட்டி வைக்கும் என்பதையும் அன்பு அவளுக்கு உணர்த்தியுள்ளது!''

தேசங்களுக்குத் துன்பவடிவாக வந்த தைமூர் மீண்டும் மௌனத்தில் மூழ்கினான். சற்று நேரம் கழித்துத்தான் பேச்சைத் தொடர்ந்தான்.

''கடவுளின் சேவகனான நான் கட்டளை இடுகின்றேன். முன்னூறு குதிரைப்படை வீரர்கள் இக்கணமே என் தேச முழுவதிலுமுள்ள மூலை முடுக்குகளுக்கு எல்லாம் சென்று இந்தப் பெண்ணின் குழந்தையைக் கண்டுபிடிக்க முனைய வேண்டும். நானும் இவளும் இங்குக் காத்திருப்போம். அந்தக் குழந்தையைக் கண்டு பிடித்து அழைத்து வருபவன் தகுந்த சன்மானம் பெற்று வாழ்வான். இது தைமூரின் கட்டளை! பெண்மணி! நான் கூறியது சரிதானே?''

தன் முகத்தின் மீது படிந்திருந்த கரிய கூந்தலைப் பின்னுக்கு ஒதுக்கிவிட்டுப் புன்னகை புரிந்தவளாய்க் கூறினாள் அவள்.

''ஆமாம்! மன்னவா!''

அந்தப் பயங்கரமான முதிய மனிதன்-சக்கரவர்த்தி தைமூர் மௌனமாக எழுந்து அவளுக்குத் தலைவணங்கி மரியாதை செலுத்தினான்.

இது முற்றிலும் உண்மை. இங்குக் கூறப்பட்ட ஒவ்வொரு வார்த்தையும் உண்மையே. நம் அன்னையர் இதை உணர்வர். அவர்களைக் கேளுங்கள். அவர்கள் தெளிவாகக் கூறுவார்கள். ○

# கனவுகளின் முடிவுகள்

மனிதனால் தூங்காமல் உயிருடன் வாழ முடியாது. மனிதன் உயிர் வாழத் தூங்கியே ஆக வேண்டும். தூங்கும்போது, கனவு காணாமல் தூங்க முடியாது! மனிதர்கள் மட்டுமல்லர், தூங்கும் பிராணிகள்கூடக் கனவுகள் காண்கின்றன. இதை விவரம் தெரிந்த நிபுணர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

கனவு காண்பது இயற்கை என்பதால், யாரும் கனவுகளைக் கண்டு அஞ்சக்கூடாது. கனவுகள் எதுவும் ஒரு சில விளைவுகளுக்கு மேல் தோன்றுவதில்லை. எப்படிப்பட்ட கனவுகள் தோன்றினாலும், கனவுகளில் முடிவுகள் தாம் முக்கியம்! கனவுகளைக் காண்பவர்கள், கனவுகளின் முடிவுகள் என்ன என்பதைத் தினமும் டைரியிலேயோ, ஒரு காகிதத்திலோ குறித்து வைத்துக் கொள்ளவேண்டும். இந்த முடிவுகள் உங்கள் மனம் என்ன செய்யத் துடிக்கிறது என்பதை விளக்கும்! உள்ளுணர்வின் எண்ணம் என்ன என்பது தெரியும். உள்ளுணர்வு மனிதர்களுடைய கட்டுக்கு அடங்காதது!



கனவுகளின் முடிவு கெட்டதாக இருந்தால், நமது மனம் கெட்டது செய்யத் துடிக்கிறது என்று விழிப்படைந்து, மனத்தை கொஞ்சம் மாற்றிக் கொள்ள வேண்டும். வீண் சிந்தனைகளுக்கு இடம் தராமல், உபயோகமான வேலைகளில் ஈடுபடவேண்டும்.

காதல் கொண்டிருக்கும் ஒருவர், காம உணர்ச்சியின்பால் ஒழுக்கக் கேடு விளைந்து விட்டதைப்போல் கனவு கண்டால், அவருடைய மனம் காம உணர்ச்சியில் ஈடுபட நினைக்கிறது என்று பொருள். அப்போது காதல் விஷயத்தில் கொஞ்சம் எச்சரிக்கையுடன் இருக்கவேண்டும்.

திறந்த வெளியில் தன்னந் தனியாக தவிப்பதைப்போல் கனவு கண்டாலும், இருட்டு அறையில் அடைக்கப்பட்டதைப் போலவோ, வழி தெரியாமல் தவிப்பதைப் போலவோ கனவு கண்டாலும் மற்றவர்களிடமிருந்து நமக்கு வேண்டிய அன்பும் ஆதரவும் கிடைக்கவில்லை என்ற ஏக்கத்தின் காரணம். அப்போது மற்றவர்களிடமிருந்து அன்பையும் ஆதரவையும் பெற வகையுடன் நடந்து கொள்ளவேண்டும். விட்டுக் கொடுக்கவேண்டும். அச்சத்தைப் போக்கி நம்பிக்கையை வளர்க்க வேண்டும். ○



# தூய்மை பெற

## கலைச்செல்வி மணிமேகலை

'நமச்சிவாய வாழ்க
　நாதன் தாள் வாழ்க
இமைப்பொழுதும்
　என்நெஞ்சில்
நீங்காதான்
　தாள் வாழ்க'
—திருவாசகம்

'திருவாசகத்திற்கு உருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார்' என்பது பெரியோர் வாக்கு. திருப்புகழும் தேவாரமும் திருவாசகமும் திருவருட்பாவும் சைவப் பெரியோர்களால் நமது பிள்ளைகள் படிக்கும் பள்ளிகளில் சொல்லித்தரப்படுகின்றன. சிறு குழந்தைகளுக்கு ஆரம்ப முதலே இம்மாதிரியான பாடல்களைச் சொல்லிக் கொடுத்து மனப்பாடம் செய்யும் சக்தியை அதிகரித்தால் அவர்கள் ஆயுள் முழுவதும் நல்லவர்களாயும் அதே நேரத்தில் வல்லவர்களாயும் விளங்குவார்கள்.

சாதாரணமாக, திருப்புகழை எடுத்துக் கொள்வோம். அதிலுள்ள தமிழ்ச்சொற்கள், புலவர்களுக்கும் வித்வான்களுக்குமே புரியக் கூடிய சொற்கள். அதையே நமது கிருபானந்தவாரியார் கதையாக, பாட்டாக, வேடிக்கையாக, விளையாட்டாக, விரிவாகச் சொல்லிக் காலட்சேபம் நிகழ்த்தும்போது நம்மையுமறியாமல் மெய்ம்மறந்துகேட்கிறோம். கரம் குவிக்கிறோம். வணங்குகிறோம். நமது மனமும் பண்படுகிறது.

சமீபத்தில் காரைக்குடியில் இருந்து சகோதரி ஒருவர் எனக்குக்கடிதம் எழுதி, தாங்கள் நடத்தும் சன்மார்க்க சங்கத்தில் கலந்துகொண்டு உரை நிகழ்த்துமாறு கேட்டுக் கொண்டிருந்தார். பள்ளி நாட்களில் மேடைப் பிரசங்கம் செய்திருக்கும் நான், இதற்கு, பதிலேஎழுதவில்லை. கூட்டங்களில் பேசும் திறன் இல்லாததே காரணம். சொல்பவர்கள் செய்வதில்லை. செய்பவர்கள் சொல்வதில்லை. இதையே கண்டவர் விண்டிலர்; விண்டவர் கண்டிலர் என்று பெரியோர் கூறியிருக்கிறார்கள்.

எல்லாரும் இந்நாட்டு மன்னர் என்ற தோரணையில் இப்போது பேச்சுக்களும் கண்டனங்களும் கூட்டங்களும் எதிர்ப்புக்களும் சர்வசகஜமாக நிகழ்வதை நாம் பார்க்கிறோம். எது எப்படி இருப்பினும் வளரும் பெண்கள் பிள்ளைகள் 'மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்' என்பதை மறக்கக் கூடாது. 'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை' 'தாயிற் சிறந்தொரு கோயிலுமில்லை' என்ற முதியவர்கள் வாக்கை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும். கல்வி கற்றுக் கொடுக்கும் ஆசான் தெய்வத்திற்கு சமானம் ஆவார். சமீபத்தில் நான் எழுதிய ஒரு கட்டுரை

யில் படிக்காத பிள்ளைகள் பெற்றவர்களின் வெறுப்புக்கும் மற்றவர்களின் கேலிக்கும் ஆளாகின்றனர்கள் என்று குறிப்பிட்டிருக்கிறேன். ‘பெற்ற தந்தை தாய் இருந்தால் உமக்கிந்த தாழ்வெல்லாம் வருமோ ஐயா’ என்று பெரியவர் ஒருவர் பகவானைப் பார்த்துப் பாடியிருக்கிறார் தாய், தந்தையர் இருக்கும் வரையில் பிள்ளைகளுக்கு ஒரு தாழ்வும் வராமல் கவனித்துக் கொள்வார்கள் என்பதையே இது சுட்டிக் காட்டுகிறது. குருவை மதிக்க வேண்டியது பிள்ளைகளது தலையாய கடமை என்பதைப் பெற்றவர்கள்தாம் பிள்ளைகளுக்கு எடுத்துச் சொல்லவேண்டும்.

அன்பே தெய்வம் என்று அடிக்கடி சொல்லியே அவர்களை நல்வழிப்படுத்த வேண்டும்.

தந்தை குடும்ப நலனுக்காகப் பொருள் தேடும் பொருட்டு ஓய்வின்றி உழைப்பதால் தாயின் கடமையே. பிள்ளைகளைத் தூயவர்களாக்குவது!

நெறியல்லா நெறிதன்னை
நெறியாக நினைவேனைச்
சிறுநெறிகள் சேராமே
திரு ‘வருளே’ சேரும் வண்ணம்
குறியொன்றும் இல்லாத
கூத்தன் தன் கூத்தையெனக்கு
அறியும்வண்ணம் ‘அருளிய’ வாறு
ஆர் பெறுவார் அச்சோவே!

—தேவாரம்

ஒரு சிறிய பரிசோதனையைதனே நாம் செய்து பார்க்க வேண்டும். ஒரு நிமிடம் ஜன்னல் வழியாக நாம் வெளியே பார்க்க வேண்டும். மிகச் சரியாக ஒரு நிமிடம் கழித்து வெளியே பார்ப்பதை நிறுத்திவிட்டுத் திரும்பி வந்து உள்ளே உட்கார்ந்து, இந்த ஒரு நிமிடத்தில் நாம் எனனென்ன பொருள்களைக் கண்டோம், யார் யாரைப் பார்த்தோம், என்னென்ன ஒலிகளைக் கேட்டோம் என்று ஒரு காகிதத்தில் குறிப்புக்களை எழுத வேண்டும். உணரும் சக்தி நமக்கு எவ்வளவு குறைவு என்பது தெரியும்!

# நமது சக்தி



கொஞ்ச நேரத்துக்கு முன் பார்த்தவைகளை, விட்டு விட்டிருப்போம்! மறந்து விட்டிருப்போம்! இது எல்லாருக்கும் இப்படித்தான். எதிரில் பார்ப்பவைகளையும், கேட்பவைகளையும் உணரும் சக்தியை நம் வளர்த்துக் கொள்ளவில்லை!

இனியாவது நாம் நமது உணரும் சக்தியை வளர்க்க வேண்டும். இதற்கு முதலில் நாம் நம்மிடம் எந்தவிதக் குறைகளும் இல்லை என்பதை உணர வேண்டும். நமது பார்வை நன்ருக இருக்கிறது. காதுகள் சரியாகக் கேட்கின்றன. தொட்டால் நாம் தொடும் பொருள் எப்படிப் பட்டது என்று உணரமுடிகிறது. நாக்குக்குச் சுவை தெரிகிறது. மூக்கிஞல் எப்படிப்பட்ட வாசனையையும் உணரமுடிகிறது. இவைகளை நாம் மிகச் சரியாகப் பயன்படுத்துவதில்லை. அவ்வளவுதான்!

கண்களைக் கொஞ்ச நேரம் மூடிக்கொண்டு 'நமக்குக் கண் பார்வை போய் விட்டால் எப்படி இருக்கும்?' என்று சிந்தித்துப் பாருங்கள். கண்களின் அருமை புரியும். காதுகளை மூடிக்கொண்டு. காது கேட்கா விட்டால், எப்படி இருக்கும்?' என்று எண்ணிப் பாருங்கள். கேட்கும் சக்தியின் அருமை புரியும். நாக்குககு உணரும் சக்தி இல்லாவிட்டால் எப்படி இருக்கும, நாக்குக்கு ருசி தெரியாவிட்டால் எப்படி இருக்கும், மூக்கு வாசனை பிடிககும் சக்தியை இழந்து விட்டால் எப்படியிருக்கும என்று எண்ணிப் பார்த்தால், இவைகளை இனியாவது நன்ருகப் பயன்படுத்துவோம், நமது உணரும் சக்தியை வளர்ப்போம என்கின்ற எண்ணம் நமக்கு அதிகமாக வரும்! இதனுல் ஆற்றல் வளரும்!

# சமாதானப் புருவின் மறைவு

எம். முகம்மது அஷ்ராப்

''பதினேழு ஆண்டுகளாக மனதை அரித்துக் குத்திக்கொண்டும், வாட்டிக்கொண்டும் தீராத நோயாக இருக்கும் காஷ்மீர் பிரச்சினை தீரும். அதனால் இந்தியாவின் எதிர்காலம் ஒளிமயமாக அமையும், போர் மேகங்கள் மறைந்து அமைதி ஞாயிறுஎழும், இந்தியா — பாகிஸ்தான் வேற்றுமை உணர்வு பகையுணர்ச்சி எல்லாம் ஒடுங்கி அமைதி நிலவும்'' இவ்விதமெல்லாம், பிரதமர் லால்பகதூர் சாஸ்திரி தாஷ்கண்ட் சென்றதினால் எண்ணி இன்ப வானிலே ஆனந்தச் சிறகடித்துப் பறந்தோம். ஆனால், வெற்றி ஓலை வருமுன் சாவோலை முந்திக்கொண்டது! பன்னீர் தெளித்து ஆவலுடன் வரவேற்க வந்த நம்மைக் கண்ணீர் வடிக்கச் செய்து மறைந்துவிட்டார்! சாகுமளவும் நம்மைவிட்டு, நம் மனதைவிட்டு அகலாத தீராப் பெரும் புண்ணை உண்டாக்கிவிட்டார். சாஸ்திரி அவர்கள் தாஷ்கண்ட் ஒப்பந்தத்தில் கையெழுத்திடவில்லை. தனது உயிரையே முத்திரையாகப் பதித்துவிட்டார். ''இறப்பு எவரையும் விடாது, அறிவித்துக்கொண்டும் வராது'' என்ற பொன்மொழி மெய்ப்பிக்கப்பட்டுவிட்டது!

இவ்வாறு நாட்டின் கண்ணியத்தைக் காத்த நமது நல்ல தலைமை அமைச்சர் உயர்திரு. லால்பகதூர் சாஸ்திரி அவர்கள் 1904-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 2-ம் தேதி மொகல்பராவில் பிறந்தார். தனது இரண்டு வயதில் தந்தையை இழந்தார். எனவே இவர் தன் இரு சகோதரர்களுடன் தன் பாட்டனார் இல்லத்தில் வாழவேண்டிய நிலை ஏற்பட்டது. தமது 12-ம் வயதில் காங்கிரஸ் தலைவர் நரேந்திர தேவைச் சந்தித்தார். இச்சந்திப்பின் பயனாகக் காந்தியடிகளுடன் சாஸ்திரி தொடர்பு கொண்டார். பின்பு இவர் காந்தியடிகளுடன் நாட்டின் உரிமைப் போராட்டத்தில் ஈடுபட்டார். சாஸ்திரி தனது 22-வது வயதில் காசி சர்வகலாசாலையில் பட்டம் பெற்றார். தமது 24-வது வயதில் லலிதா சாஸ்திரி என்னும் பெண்மணியை வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக்கொண்டார்.

லால்பகதூர் சாஸ்திரி அவர்கள் முதலில் அலகாபாத் நகரசபை மெம்பராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1952-ல் டெல்லி மேல்சபை உறுப்பினராகிப் போக்குவரத்து மந்திரி ஆனார். அதன்பின், வர்த்தக மந்திரியானார். உள்துறை மந்திரியாக இருந்த திரு கே. சி. பந்த் மரணம் அடைந்ததும், இவர் உள்துறை மந்திரியானார். பின் நம் நாட்டின் முடிசூடா மன்னர் உயர்திரு. ஜவஹர்லால் நேரு அவர்கள் மறைந்ததும் இவர் நமது தலைமை அமைச்சராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

நேருவின் வாரிசாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட இவர், பாகிஸ்தான் தகராறு, இந்திக்கலவரம், உணவுப் பஞ்சம், பொருளாதார நெருக்கடி ஆகியவை தலைவிரித்தாடிய பொழுதும் இவற்றை மிகத் திறமையாகச் சமாளித்தவர் என்றால் மிகையாகாது.

''உருவுகண் டெள்ளாமை
வேண்டும் உருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து.''

என்ற பொய்யாமொழிக்குப் பொருத்தமான எடுத்துக்காட்டாக விளங்கினார் சாஸ்திரி. அவர் விரும்பி ஏற்றுக்கொண்டவை அன்பும், எளிமையும். வெறுத்து ஒதுக்கியவை பணம், வீண் ஆணவம், கர்வம் முதலியன.

திரு. சாஸ்திரியின் மறைவு நமக்கெல்லாம் பெருந் துக்கத்தைத் தரக்கூடியதுதான். பொங்கும் துக்கத்தைப் பொறுத்து, பொழியும் கண்ணீரைத் துடைத்து அமைதி பெறுவோம். அவர் நடந்த தூய்மையான வழியிலேயே நாமும் நடக்க உறுதி பூணுவோம. அவ்வுறுதியினால், சந்தனக் கட்டையினிடையே எரிக்கப்பட்ட அவரது ஆத்மா சாந்தியடையட்டும்!

முடிவு

'மாணவர்கள் பள்ளிக்கூடத்தில் ஒழுங்காகக் கற்றுக்கொள்ளாவிடில், அவர்களுடைய படிப்புக்காகப் பணத்தைச் செலவிடுவது நாட்டிற்குப் பெரும் நஷ்டம்'

—மகாத்மா காந்தி

—நாச்சிமுத்து பாலிடெக்னிக் பொள்ளாச்சி 67 ஆண்டு மலரில் இருந்து.

# மகரிஷி மகேஷ் யோகி



மகரிஷி மகேஷ் யோகியின் பெயர் அடிபடாத பத்திரிகைகள் இன்று இல்லை. அந்த அளவுக்கு அவர் இன்று உலகத்தைக்கவர்ந்து விட்டார். இரயில் விபத்துக்களும், பூகம்பங்களால் ஏற்படும் கஷ்டங்களும், அணுகுண்டுகளும், புதுப்புது நோய்களினால் ஏற்படும் ஆபத்துக்களும் நிறைந்த இந்த உலகத்தில் இப்போது அமைதி இல்லை. மக்கள் எல்லாரும் பீதியுடன் வாழும் காலம் இது. பெரும் பணக்காரர்களுக்கும், மேல் நாட்டு நாகரிகங்களில் ஊறியவர்களுக்கும்கூட மன அமைதி இல்லை. எப்படிப்பட்ட வாழ்க்கையை மேற்கொண்டவர்களுக்கும் சுலபமான நியாய முடிவுகளால் அமைதியைத் தர முடியும் என்று சொல்லி, ரிஷிகேசுஷில் உள்ள தனது ஆசிரமத்தில் பயிற்சி அளித்து ஏகப்பட்ட பணக்காரர்களுக்கும்கூட, வெளி நாட்டவர்களுக்கும்கூட அமைதியை உண்டாக்கியிருக்கிறார் மகரிஷி. இது இவருக்குப் பெரும் வெற்றியையும், புகழையும், பணத்தையும் கொடுத்திருக்கிறது.

மகரிஷி மகேஷ் யோகிக்கு அந்நியச் செலாவணியாகப் பல இலட்சம் ரூபாய் கிடைத்து வருகிறது. ஆத்மீக வழிகளை வளர்க்க இந்தப் பணத்தை பெரிதும் பயன்படுத்தி வருகிறார் மகரிஷி.

மகரிஷி அரசியலிலும், அரசாங்க அலுவலகங்களிலும், பொதுவாக நாட்டிலும் உள்ள ஊழல்கள் நல்ல முறையில் உபதேசம் செய்து ஒழிக்க முடியும் என்று இப்போது அதற்காகப் பெரிதும் பாடுபட்டு வருகிறார்.

மனிதர்களின் வாழ்க்கை முறை எப்படி இருந்தாலும், நாகரிகக் கொள்கைகள், உடுத்தும் உடைகள், உண்ணும் உணவு எப்படி இருந்தாலும் அவைகளைப்பற்றிக்கொஞ்சமும்கவலைப் படாமல் மனிதர்களின்மனத்தை மட்டும் சுத்தம்செய்து, மனித குலத்துக்கு அமைதியைத் தர முயற்சி செய்து வரும் மகரிஷியைப் பாராட்டாமல் இருக்க முடியாது!

மகரிஷியின் செயல்களும், மகரிஷியின் தெளிவான கருத்துக்களும் பொது மக்களை மிகவும் கவர்ந்து விட்டன! உலகத்தையே கவர்ந்துவிட்டன!

வெளியிடுபவரும், ஆசிரியரும் இராம. மணிமேகலை, 4. தணிகாசலம் செட்டி ரோடு, சென்னை-17. அச்சிடுபவர்: ஜோன்_ஈ. காசி. சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ் 81-5 பாண்டிபஸார், தியாகராயநகர், சென்னை-17.